௧௯௦. சோழ ரிருமருங்குஞ் சூழ்ந்துவரத் தொண்டையரும்
பூழி யருமருங்கு போற்றிசெய - வூழி

௧௯௧. யெழுபிறப்புந் தானறுத்த யாதவர்கோ னின்று
செழுமணிப்பொற் செங்கோல் செலுத்தத்-தொழுகோயிற்

௧௯௨. சட்டமிடத் தோன்றிச் சதகோடி வைபவஞ்செய்
சிட்டய ராமனின்று சேவித்துக் - கிட்ட

௧௯௩. வடமடத்து மாமுனியு மாமணி கங்கைத்
திடமடத்து வாழ்தே சிகனுங் - கடலனைய

௧௯௪. கொண்டற் கொடையாறு கொத்தாரும் வெண்ணீற்று
வண்டற் பதினெண் மடத்தாரும் - புண்டரத்துச்

௧௯௫. சுத்த சிவாகமத்துத் தொல்லைநூற் காரணத்துப்
பத்துக் குடிவேத பாரகரு - மத்தனருள்

௧௯௬. வைத்திடுகோ யிற்கணக்கு மந்திரவோ லைக்கணக்கு
முத்திரிக்குங் கூர முறையாரும் - பத்திபுரி

௧௯௭. யெட்டுக்கொத் தான விளையநா யக்கர்களும்
வட்டக் களபமுலை வண்ணவா - யிட்ட

௧௯௮. சிறுபத்தி முல்லைநகைத் தேவரடி யார்க
ளறுபத்து நாலுவகை யாரு - முறுதியின்மற்

௧௯௯. றுள்ள வடியாரு மோங்கு தமிழோருந்
தெள்ளிய பாடகருஞ் சேவிப்பக் - கள்ளமதன்

௨௦௦. பூமழையு மேற்சொரிபொற் பூமழையு மந்தணர்கைப்
பூமழையு மண்டம் பொதிந்தேற - மாமறுகி

௨௦௧. லாணிக் கனகத் தமைத்தசிலை யான்வந்தான்
மாணிக்கச் சோதி மலைவந்தான் - பாரம்

௨௦௨. பத்துப் பிறப்பிற் பகழிப் பிரான்வந்தான்
செத்துப் பிறவாத தேவன்வந்தா - னித்தனையிற்

௨௦௩. சார்ந்தாரைக் காத்த தயாவா ரிதிவந்தான்
சேர்ந்தார்க் கினிய சிவன்வந்தான் - கூர்ந்தசிவ

௨௦௪. நம்பிக்குந் திண்ணனுக்கு நம்பிக்கை யான்வந்தான்
றும்பிக்கை யானைத் துணைவந்தான் - செம்பவளச்

௨௦௫. சோதிப் பெருந்தேவன் சோதி விடங்கன்வந்தான்
போதிக்க வொண்ணுப் பொருள்வந்தான் - கோதற்ற

௨௦௬. வாயிரநா மத்தான்வந் தானன்று செங்காட்டிற்
போயிரந்த பிள்ளைப் புலிவந்தா - னேயமென்றும்

௨௦௭. வைத்த மலைக்கொழுந்தான் வந்தான்வந் தானென்று
பத்திபுரி சின்னம் பணிமாறத் - துத்திவரி

## குழாங்கள்.

உ0அ. நாக ருலகமணி நாக நிதம்பியரும்
பாக ருலகமொழிப் பாகரு - மேகமணி

உ0௯. சந்திரனே போன்றமுக சந்திரலோ கத்தாரு
மிந்திரனூ ரிந்திரைக ளெல்லாருங் - கந்தருவ

உக0. கன்னியருஞ் சித்தரிளங் கன்னியருங் கின்னரர்தங்
கன்னியருங் கிம்புருட கன்னியரும் - பொன்னின்

உகக. சிலைவா ருநங்க சிலைப்புருவத் தாரு
மலைவாழ் முகிலளகத் தாரு - நிலையாய

உகஉ. கண்ண னுலகமலர்க் கண்ணாரும் பூலோக
வண்ண மகளிர் வடிவெய்திப் - பண்ணையா

உகங. யிட்டு மரவிற் கிடங்கொடுத்த தென்னென்று
கூட்டமிடுந் தோகைக் குழாங்களோ - காட்டுமுன்னே

உகச. யெங்க ணதிசய யிவரடக்க லென்னென்று
பொங்கி வருமெகினப் புட்களோ - பங்கமகத்

உகரு. தோடு முழையை யுரித்தா ரிவரென்று
தாடி வருமானின் சங்கமோ - சூடேற்றி

உக௬. மீனக் கொடியானை வென்றகொடி யாரெனச்சூழ்
கானக் குயிலின் கணங்களோ - யானை

உகஎ. பிடித்தபிடி யாயுரித்த பேராள னைப்பின்
பிடித்த பிடியின் பெருக்கோ - சடைக்கு

உகஅ. ளிளைத்தமதி சிக்கியதென் றெவ்வுடுவுங் கூடி
வளைத்தனவோ வென்று மருளக் - களித்துமணி

உக௯. மாளிகையிற் சூளிகையின் மண்டபத்திற் கோபுரத்தி
லாளிநிரை முற்றத்தி லாடரங்கிற் - சாளரத்தின்

உஉ0. மாடத்தி லாலயத்தின் மாமகர தோரணத்திற்
கூடத்திற் கூடிக் கொடியிடையீ - ரோடிவருங்

உஉக. கல்லா லடியிற் கரும்பினிர தந்தன்னை
யெல்லாருங் கண்ணி லினிதருந்தீர் - பொல்லாத

உஉஉ. வாலால முண்டுலகை யாளு மடையாளக்
கோலா கலக்குறியைக் கும்பிடீர் - காலா

உஉங. லுதைத்தமுடி யார்வங் துலாத்துமது பாரீர்
பதைத்ததிரு வாபரணம் பாரீ - ரதற்கடங்கா

உஉச. வெண்மதியைப் பாரீரவ் வெண்மதிபோற் சிக்காமற்
பெண்மதியை நன்றுப் பிடித்திடீர் - திண்மலையா

உஉரு. யிச்சுதர்கள் வீறிரு ரித்தேவி யார்க்கின்னம்
பச்சுடம்பென் பாலென் பகர்ந்திட - வொச்சி

உஉசா. விறைச்சிறுகர் வோமென் றெலும்பணிய வேண்டா
மறைச்சுவிட வொன்று வணங்கிர் - குறிச்சணிய

உஉஎ. விந்தத் திருவுரத்துக் கேனக்கொம் பென்கொங்கைத்
தந்திக்கொம் பாகாதோ தான்கேளீர் - முந்தியதா

உஉஅ. யோங்கியவோங் காரத்தி னுட்பொருளாய் நின்றதுபோற்
றேங்குதிரு வாசியினைச் சேவியீ - ராங்கார

உஉகூ. மாலு பயனு மதிக்கமிநிக் கப்பெற்ற
காலின் முயலகனைக் கைதொழீர் - கோலியெதிர்

உ௩0. நில்லீ ரொனவெதிரே நிற்பார் கதிரோனைப்
பல்லீருங் கையைப் பரவுவார் - வல்லி

உ௩க. திருத்தோடு நிற்கச் சிவந்தபா திக்குக்
கருத்தோடு நெஞ்சங் கரைவா - ரொருத்தோனே

உ௩உ. வில்லடிமே லேயிந்த மெல்லடியா ளாரென்பார்
வல்லடியோ வந்த வரதென்பார் - நல்லடியான்

உ௩௩. கண்களோடு மட்டுங் கரையாத கன்னெஞ்சம்
பெண்களையோ நாடுமோ வைப் பேசுவார் - திண்கிரணத்

உ௩௪. தெண்மணிக ளேசாத்திச் சேடன்பூ சித்தவர்மேற்
கண்மணிக ளேசாத்திக் காட்டுவா - ருண்மயங்கிப்

உ௩ரு. பூசலா மென்றாலும் பூசலாஞ் சந்தனத்திற்
பேசலா மோவென்று பேசுவா - ராசையா

உ௩சா. லத்தியா னேமுருவா லக்காள னேராமனேம்
பத்தியா லாவீர் பரிந்தென்பார் - புத்தியெல்லாம்

உ௩எ. போயிரங்கு வீர்ஞானப் பூவையணைந் தீரினிநீர்க்
காயயணை யீரென்று கண்பிசைவார் - நேயங்

உ௩அ. கனியார்கல் லாலின் கனியார் மடவார்க்
கினியா ரினியாரிங் கென்பார் - முனியாம

உ௩கூ. லேத்தவரு மெங்கட் கிரங்கீரோ சார்ந்தாரைக்
காத்தவரோ யென்று கழறுவார் - பூத்த

உ௪0. பனியிதழி மார்பெமக்கே பங்கென்று கேட்கக்
கனியிதழி மாலைக் கடிவார் - தினமு

உ௪க. மழைததுவா ழ வித்தவமோ யானுன் மடவீ
ரிழைப்பரோ வெம்மைநமக் கென்பார் - தழைத்தசுரைக்

உ௪உ. காய்வீணை யிட்டீரோ கைத்தாய ராவெமக்கு
வாய்வீணை யிட்டீரோ வந்தென்பார் - பாய்வார்போற்

உசங. பாணிமா னுக்கெதிரே பார்வைமா னைத்தரப்பார்
நாணிமா னித்தோமே நாமென்பார் - பூணே

உசச. டுறுவார் வடத்தி னுளமூச லாடப்
பெறுவா ரிவரிலொரு பேதை - குறுகாத

பேதை.

உசரு. தாயிற் சிறந்தானைச் சாரும் புயங்கேசன்
வாயிற் பெறுதவிள மாணிக்க - நாயனார்

உசசா. செம்பொற் சரணஞ் செறியுங் களியானைக்
கொம்பிற் பிறவாக் குறுந்தரள - நம்பனார் [ருஞ்

உசஎ. வேட்டிருக்கத் தின்னனார் வேட்டம்போய்க் கொண்டுவ
சூட்டிறைச்சி தோயாச் சுவைச்சிறுதே - னூட்டியத்தர்

உசஅ. தண்டா மரையடிசேர் சங்கத்தோ ரந்தாதி
யண்டா முழுச்சிற் றலங்காரங் - கொண்டாடித்

உசகூ. தண்கயிலை யாரைத் தழுவுஞ் சிவகோசன்
வண்கைப் புகுதா மருக்கொழுந்து - வெண்கிரணச்

உருo. சோமன் செறிசடையார் சொற்கயிலை வீதிதொறுங்
காமன் விளையாக் கரும்புமுளை - யீமனார்

உருக. கங்கைக் கரைக்காமன் காவிபோற் கூடலிலே
வெங்கழுவிற் புக்கார் விரதம்போ - லங்கவனைச்

உருஉ. சொல்லா மகத்திற் சுரரெடுத்த வாயுதம்போற்
கல்லாக் கொலைபடைத்த கண்ணினா - ளெல்லார்க்குந்

உருங. தம்பிரான் பாலொடுங்குந் தக்கோ ரிருவருமா
யம்பினு கத்தொடுங்கு மண்டமுமாய்ச் - சம்பந்தன்

உருச. வண்ணக் குடத்தென்பு வைத்தெழுப்பு மங்கையுமாய்த்
திண்ணற் கொளித்திருக்குஞ் செங்கையுமாய்க் - கண்ணிரு

உருரு. மண்டத் தமரு மருஞ்சக்ர வாகமுமாய்த் [ளு
துண்டப் பணிவாய்ச் சுடர்களுமாய்த் - தெண்டிரைவா

உருசா. யான்றவமு தக்குடமா யாகத் திருந்தினிமேற்
றோன்றி வளருந் துணைமுலையா - ளான்றுவிட

உருஎ. முண்டார் திருச்சடைமே லுன்மத்த முண்குதலை
வண்டாய் பிழற்று மழலையாள் - சண்டேசன்

உருஅ. போற்றும் பரமனார் பொன்கொழிக்கும் பொன்முகரி
யாற்றி னறல்போ லளகத்தாள் - கூற்றிலே

உருகூ. யாங்கவுரி யல்லா தரும்பியவெண் ணுன்கறமுங்
தாங்க முயன்றனைய தந்தத்தாள் - பாங்கியென

உசுO. நின்றுதனை நீங்கா நிழலை யுடன்கொண்டு
சென்று மனைபுகுந்து தேடுவாண் - முன்றிலிலே

உசுக. மெத்துமணற் சிற்றில் விருந்தருந்த வாவென்று
சித்திரத்தி னேடொல்கிச் செப்புவாள் - கைத்தாயை

உசுஉ. நீங்கிப் பிரியா ளிலைக்கண்ண டிப்பொருளை
வாங்கித்தா வென்று வருத்துவா - ளாங்கருணை

உசுரு. யாய்நீர்மை வேட னபிடேக மேனியைப்போல்
வாய்நீ ரமுதொழுகு மார்பிறு - நேய்நீர்மை

உசுச. வள்ள லடியார் மனம்போ லணுவளவுங்
கள்ள மடையாக் கருத்தினள் - கிள்ளையுடன்

உசுரு. முவித் தனைவளர்க்குந் தாயரள கச்சுரும்பை
நாவற் கனியெனவே நச்சுவாள் - பாவனையி

உசுசு. லென்னிலா ஞானவெளி யேகாந்த யோகியைப்போற்
றன்னிலே தான்பேசுந் தன்மையா - ளன்னைமார்

உசுஎ. மாணிக்கக் கல்லால் வயிரீ ரியமணியா
லாணிக் கனகத்தா லரத்தாற் - பேணிக்

உசுஅ. கொழுங்கமுகு நாட்டிக் குலாவியமுற் றத்தே
செழும்பவளப் பொன்னூசல் செய்ய - வெழுந்திவளு

உசுசு. மென்னை மணியூச லேற்று மெனவேற்றி
யன்னையர்க ளாட்டு மளவிலே - சின்னங்க

உஎO. ளார்ப்ப மணிமுழவ மார்ப்ப வலம்புரிக
ளார்ப்ப் வருமறைக ளார்ப்பவே - போர்க்கடலா

உஎக. னென்றுங் கழியான்பச் சேரியா னீர்க்குளத்தான்
தன்றுந்து மாற்கின்னுங் கால்வாயா - னின்றுதனை

உஎஉ. யேத்தத் துரவா னிருங்கி ணறுந்தாரான்
சாத்தியநீர் வற்றுத் தடாகத்தான் - கோத்த

உஎரு. புரமடுவான் முத்தி புகற்கேணி யாவான்
சுரரிதய வாவியிலே தோய்வா - னிரவலர்நோ

உஎச. யாற்றினன் சூலத் தகழுதிரங் கைத்தலையி
லூற்றின னன்னினைவி லோடையா - னூற்றெட்டுத்

உஎரு. தாளத்தி லாடுதிருத் தாளன் கயிலாயன்
காளத்தி நாதன் கணநாதன் - வேளத்தன்

உஎசு. கற்றைச் சடையன் கனகக் கொடியாடும்
வெற்றித் திருத்தேர்மேன் மேவுதலுங் - கொற்றமதன்

உஎஎ. மாசிப் புதுத்தேர் மருவினன் மற்றிவளு
மீசன் பழந்தேர்க் கிறங்கின - ணேசத்தின்

உஎஅ. முத்தேர் நகையாரு முன்கொண்டு போய்த்தொழுதா
ரொத்தே தொழுதங் குழையோரை - யித்தேரி

உஎகூ. லாரொன்றுள் கல்லா லடிக்கரும்பென் றூரதனைத்
தாரு மெனக்கென்னத் தாய்மாருங் - காரிகையே

உஅ0. யிந்தக் கரும்பெவர்க்கு மெய்தாக் கரும்புகா
ணந்தவயன் மாலுக் கரிதுகாண் - செந்தமிழ்சே

உஅக. ராலவா யிற்பண்டு மாடுங்கா ணாடியுங்கல்
லாலை யடைந்துமழி யாதுகாண் - சாலவொரு

உஅஉ. சற்றுங்கோ தில்லைக்காண் சாற்றி லதிகங்காண்
சிற்றின்பர் நாவிற்சே ராதுகாண் - முற்றும்பே

உஅங. ரின்பப் பெருக்கங்கா ணிச்சை கடந்தேறு
மன்பர்க்கோ ராரா வமுதங்கா - ணென்பளவிற்

உஅச. றேறுங் கரும்புந் தெருவகல நின்றமட
வாருங் கரும்பு பனைபுகுந்தார் - போர்மதனு

உஅரு. ரிக்கரும்புக் கென்கருப்பை யீந்தாலு மீவரெனக்
கைக்கரும்பைக் கொண்டு கடிதகன்று - னொக்குமே

உஅசு. பாலற் கவன்றந்தை பாற்கடலை யீந்தாரா
ராலைக் கரும்பளித்தா லன்றென்பார் - மேலொருத்தி

## பெதும்பை.

உஅஎ. தக்க வெழிற்பெதும்பை தானுநீங் காமுகுளப்
பக்குவப்போ தன்ன பருவத்தாள் - கைக்கு

உஅஅ. ளளவுமதன் செங்கோற் சகப்பட்டா ளேனு
மிளவரசு தான்கொண் டெழுந்தாள் - களபவிளங்

உஅகூ. குன்ற முலையார் குறிப்பறியுங் கொள்கையாள்
கன்று தளிர்கோதுங் கல்வியா - ளொன்றியசெம்

உகூ0. பொன்னை யறியப் புழுகறியப் பூவறியத்
தன்னை யறியுந் தறுவாயா - ளன்னைமா

உகூக. ராலு நடையா லலையே றிளவன்னக்
காலி னடைசிறிது கைவந்தாள் - கோலமத

உகூஉ. வெற்புவரு மட்டுமிறை வெண்ணிலொடுங் கிப்பார்க்குஞ்
சற்ப முகத்துமுனை தன்னைப்போற் - புற்புதம்போற்

உகூங. சித்தர்கடங் கையிற் சிவலிங்கம் போற்சிறிது
முத்திவரத் தோற்று முலையினா - ளத்தனுவே

உகூச. ளேழுலகு மோரிலக்கா வெய்ய வெனக்கினிமே
லேழு கணையா மெனுங்கண்ணாள் - சூழலகோர்

உகூரு. பூராயக் காட்சியே போதுமெனத் தென்கயிலை
யாரா வமுத ரணிகொண்டாள் - பாரிரந்த

உகூகா. தெண்டிரைமா லென்னச் சிறுகிக் கருகியடிக்
கொண்டுவளா ரநின்ற கூந்தலா - ளொண்டொடியா

உகூஎ. ளொத்திலங்கு மையெழுதி யோதிகோ திப்பின்னி
நித்திலப்பூட் டக்தரித்து நின்றிடுவாள் - சித்தசன்றன்

உகூஅ. வாம்பரியுங் காகளமு மானத்தே ருங்குடையும்
பூம்பகழி யும்பயிலும் பூங்காவி - லாய்பளிக்கு

உகூகூ. மண்டபத்திற் சோதி மணிக்காந்த வேதிகையிற்
புண்டரிக மான்போற் பொலிந்தேறி - வெண்டரள

௩௦௦. மூர லொளிவீச முத்தின் பருங்கழங்குங்
காரளக நீலக் கருங்கழங்கு - மாரமுதச்

௩௦க. சேமவித ழைப்போற் சிவந்தபவ ழக்கழங்குங்
காம ருகிர்வயிரக் கற்கழங்குந் - தாமமலர்க்

௩௦உ. கைச்செம் பதுமரா கக்கழங்கும் பொற்கழங்கும்
பச்சை மயிலியலின் பைங்கழங்கு - மெச்சவெடுத்

௩௦௩. தொன்றென் றுலகமெலா மொன்றா யொடுங்கிவிடு
மன்றுமுளா கல்லா லடிபாடி - நன்றென்

௩௦ச. றிரண்டென் றெழிலடியா ரீடேற நல்கும்
பரந்தவிரு பாதங்கள் பாடி - நிரந்தரமு

௩௦ரு. மூன்றென்று மூன்று முதலிகளுந் தாம்புகழுஞ்
சான்ற சுருதித் தமிழ்பாடி - யான்றவொரு

௩௦கா. நாலென்று மாசிமக நாடோறுந் தெண்டனிடு
மூல மறையின் முடிபாடிச் - சாலவே

௩௦எ. யஞ்சென்று கல்லா லடியிற் கரும்பினுய
ரஞ்சா கொழுந்தி னடிபாடி - நெஞ்சுருகி

௩௦அ. யாறென்று நாளு மமரர்புகுந் தாறுடி
நீறணியும் பொன்முகரி நீர்பாடி - வீறுடனே

௩௦கூ. யேழென்று முன்சிலந்தி யெய்தொளியைப் பின்கூடி
வாழு மெழுவர் வளம்பாடிக் - கேழின்

௩க௦. மிசையேழு மாட விழியாட நாவி
லிசையேழு மாட விருந்தா - ளசையுமின்னார்

௩கக. போது படமயிலே போது மெனச்செங்கைப்
போதின்விளை யாடல்விடும் போதிலே - பூதப்

௩கஉ. படையான் பணித்தொடையான் பாணிச் சடையா
னுடையான் புலித்தோ லுடையான் - விடையான்

௩கங. குழைத்தாயன் கண்டங் கரியா னருளுங்
குழைத்தாயன் கண்டங் கரியான் - குழைக்காதன்

௩கச. வேதப் பரியினன் வேத ருமலியான்
வேதப் பொருளினன் வேதாந்த - நாதன்

௩கரு. குடங்கையணி நீயன் குளிர்ந்தகயி லாயன்
றடம்பணில மாயன் சகாயன் - கடம்பவன

௩கசு. னன்கழ லாடி நமன்கழல வேதாக்கும்
பொன்கழ லாடிதேர் போந்திடலுங் - தன்கழலை

௩கஎ. யேழு பிறப்பு மெறிவ தெனவெறிந்தா
டோழிமார் தாய்மார் தொழுதெழுதாள் - சீழிற்

௩கஅ. படிநிறையு மால்பிரமன் பல்வெளியுங் காணு
மடிமுடி யைக் கண்ணு ளைந்தாண் - முடியிற்

௩கக. கலைக்கொழுந்து சூடுங் கயிலாயச் செம்பொன்
மலைக்கொழுந்தின் மீதிலே வைக்க - முலைக்கொழுந்து

௩உ0. போதா தெனச்சிறிது புந்தியிலே சிந்திப்பாண்
மாதா யனைப்பார்த்திம் மாதிவளா - ராதிக்

௩உக. கிசைய வினிதிருந்தா னென்னையொரு பாவி
லிசைய விருத்துமென வன்னார் - வசமோ

௩உஉ. மலைக்கு மலைகொடுத்த வாறுய்க் கயிலை
மலைக்கு மலைகொடுத்த மானை - விலக்கியொரு

௩உ௩. மாதளிப்பா ருண்டோ மயிலேயென் பாரைநீ
ரோதறிவீர் பாரீ ரிவர்வேணி - மீதிவளை

௩உச. யென்றவர்க்குக் கையா லிசைவித்தா ளவ்வளவிற்
சென்றது திண்டேர் செலநோக்கி - நின்றபே

௩உரு. ராசை யுடையீ ரறியாச் சிறியாளை
யாசையுடை யாருக்குள் ளாக்கினீர் - சீசியுமைச்

௩உசு. சொல்லாது சொல்லியவர் தூற்றுமோ தோற்றீர்போம்
புல்லா விலையெடுத்துப் போட்டோமோ - சல்லாபக்

௩உஎ. கல்லினெறிந் தாறலைப்புக் காணோமோ கைகொட்டி
யெல்லவரு மம்பலத்தி லேற்றுமோ - நல்லுடம்பைக்

௩உஅ. குத்துடம்பு செய்யோமோ கூத்தாடல் காணோமோ
நித்தமொரு காலி னிறுத்தோமோ - கற்றவர்முன்

௩உக. சங்கித் திடோமோ தலையி லடியோமோ
பங்கச் செருப்பேந்தப் பண்ணோமோ - செங்கைவிரன்

௩௩0. மூக்கிலே தான்வைத்து முந்திச் செவிபுதைத்து
வாக்கிலே நன்றாக வையோமோ - நோக்கியுமைக்

௩௩௧. காபாலி யென்றோமோ காட்டஞ் சுமந்தோமோ
வாபோவென் றேவி வருத்தோமோ - பாப

௩௩௨. மதித்துவட ராக்கோமோ மன்றுடி றூறு
மெதிர்த்தகொடு நஞ்சை யிட்டோமோ - புதைத்திவற்றைப்

௩௩௩. பொய்தானென் றீரோ புறம்பிட்டோ மோபண்டு
செய்தானை யேதேனுஞ் செய்தீரோ - கைதவத்தை

௩௩௪. யேழைக்குக் காட்டுவீ ரீட்டேறு வீரதனால்
வாழு மிரப்பகன்று வாழுமென - யாழுளையைக்

௩௩௫. கொண்டு மனைபுகுந்தார் கோலவே ளப்பருவங்
கண்டு சிறிதுசில காணுன்போல் - விண்டகன்றான்

மங்கை.

௩௩௬. வேறொருத்தி பூமங்கை வெண்டா மரைமங்கை
தேறு மிமயச் செயமங்கை - கூறுபொரு

௩௩௭. மும்மங்கை யர்க்கடந்து மூவரைமெய்க் காவலிடுஞ்
செம்மங்கை யாகிவளர் சீர்மங்கை - வெம்மைமலிட

௩௩௮. மன்றே தரித்தா னமுதகலை மண்டலமே
வின்றே யெழுந்த தெனுங்கண்ணுண் - மன்றேறி

௩௩௯. யாடும் பதத்தா னவன்சுரதக் கூத்தினுக்குக்
கூடியன தாளக் குவிமுலையாள் - பாடகக்காற்

௩௪0. பொற்றொடியாள் பாகன் புணர்ந்துபுக வீணையுள்ளாள்
பற்றுதுடி யுள்ளாள் பணியுள்ளாண் - முற்றிவளை

௩௪௧. * மோசைமுதற் கங்காளன் முன்னூக்கப் பின்னூக்கு
மாசையிருட் டன்ன வளகத்தாண் - மாசில்

௩௪௨. * விடைபிரிந்த வோதிமத்தின் மென்பெடைபோ லன்னை
யிடைபிரிந்து சேரு மினத்தாள் - கொடிமகரச்

௩௪௩. * சித்தச வேந்தன் சிறந்தகலை நூல்படித்துப்
புத்தரங்கி லேறப் பொருந்துவாண் - மத்தகத்துக்

௩௪௪. * கண்பொடிசெய் தானந்தோ காற்பொடிசெய் தானிலையே
பெண்பெருமா னுக்கென்னும் பெற்றியாள் - பண்பிலவ

௩௪௫. னெய்யு மலரு மெழிலோ தியினலருஞ்
செய்யுஞ் செயலறியுஞ் செய்கையாள் - பெய்வளைக்கைத்

௩௪௬. தோழியருந் தானுமிளந் தோகைக் குழாமெனவே
யேழுநிலைக் குன்றத் தினிலேறி - வேள்வியிலே

௩௪௭. தன்னைமறந் தாட்டுத் தலைபடைத்த வம்மானை
யன்னைதனை யின்றமலை யம்மானை - முன்னைநாட்

* இக்கண்ணிகள் ஒரேபிரதியில்மட்டு மிருந்தன.

௩௪௮. கொங்கையொரு மூன்றுடைய கொம்பையரு ளம்மானை
யங்கையிலே வீற்றிருக்கு மம்மானைக் - கங்கையெனு

௩௪௯. மம்மானைப் பெற்றசடை யம்மானைப் பாடியவ
ளம்மானை யாடு மளவிலே - கைம்மானைச்

௩௫௦. சீரா டியதுடையான் செண்டா டியவிடையான்
வேரா டியசடையான் வேடன்வாய் - நீராடிப்

௩௫௧. பாலாடி நெய்யாடிப் பண்டைத்தீ யாடியயன்
மாலாடி நின்றுதொழ மன்றாடி - மேலாடி

௩௫௨. செம்பொற் கொடியாடுந் தேர்மீது தோன்றுதலு
மம்பொற் கொடியாட லாங்கொழிந்தா - ளெம்பிரான்

௩௫௩. பாதம் பணிந்தாள்பின் பார்வையிலே யம்பணிந்தாள்
போதம் பணிந்தாள் புலனறிந்தாள் - காத

௩௫௪. லடிமூள மூத்தணிக ளத்தனையு நீறாய்ப்
பொடிமூ டியதழலைப் போன்றா - ளுடையானைக்

௩௫௫. கண்ட பொழுதே கறுத்தாள் கறுத்தவே
ளண்ட வருமினியென் றஞ்சுவாள் - விண்டிவளுந்

௩௫௬. தாதியரை நோக்கித் தமியேனை யாள்வாரோ
மாதினிடத் தாரொன்றுண் மற்றவருங் - கோதையபே

௩௫௭. வண்டிலங்கு மேனியிலே வாழு மடவாரைக்
கண்டிலையோ நெஞ்சங் கரந்தாயோ - பண்டுநீ

௩௫௮. கற்றகலை யெல்லாங் கழன்ற கலையுடனே
யற்றவோ நின்னை யவர்கொண்டா - லுற்றணைக்க

௩௫௯. மாமியா ருண்டோ மலையிற் பெருநீலி
யாமவளுஞ் சக்களத்தி யாகாளோ - காமிக்கை

௩௬௦. தோற்சேலைக் கோபிச்சைச் சோற்றுக்கோ வோட்டுக்கோ
மேற்சாம்பற் கோசுடலை வீட்டிற்கோ - நாற்சந்தி

௩௬௧. யம்பலத்துக் கோவெலும்பி னாபரணம் பூணுகைக்கோ
வெம்பணிமா லைக்கோபேய் வேலைக்கோ - சம்பந்த

௩௬௨. நல்லிடத்திற் சோதித்தாய் நப்போ லியாருக்கு
மில்லறத்திற் கித்தனையு மேற்குமோ - வல்லதுமிவ்

௩௬௩. வாண்டா ரொருவர்க் ககப்படுவ ரோவல்லர்
காண்டாயே யன்றிந்தக் கள்வரோ - வேண்டினாற்

௩௬௪. சீரூ ரரியுரத்துச் செங்கமல மங்கைக்கா
வாரூரி லேசென் றருளன்பு - மோரூர

௩௬௫. ஞைசைப் பரவைதனை யப்பரவை மங்கைமுன்னே
நேசத் துடனே நிகழ்த்தன்பும் - பாச

௬௬. வலைச்சேரி யிற்பிறந்த மங்கைக்கா வந்நா
ளிலைக்கே வலைவீசு மன்புந் - தலைக்கொண்ட

௬௭. கங்கைதனை யேவிரும் கம்பையிலே யோர்மங்கை
கொங்கை தழுவக் குழையன்பு - மிங்கே

௬௮. சகலகலை மங்கை தவம்புரிந்து போற்ற
வகில கலைபருளு மன்பு - மிகரில்லாப்

௬௯. பாகொத்த செய்யமொழிப் பாண்டிவள மங்கையனை
யாகத்தி லைவைத் தருளன்பு - நீகருதி

௭௦. மாதவத்தைச் செய்துவரு மங்கையர்க ளாகென்றே
யாதரித்துத் தேற்று மனைவிலை - சோதி

௭௧. விடங்கர் விடங்களித்தார் வேணியர்பொற் றிண்டோ
ளடைந்த தயல்வீதிக் கப்பான் - மடந்தை

## மடந்தை.

௭௨. கரியகுழற் கள்ளினத்தாள் கார்ப்புருவ நெற்றி
யரியதிரு விற்கோல மானாள் - வரிபரந்த

௭௩. காமர் விழியாலங் காட்டினா ளிகுமிழ்
மாமலரோ டெட்பூ வணத்தினாள் - சோமகலை

௭௪. நன்னிலவே யன்ன நகைமுல்லை வாயினாள்
கன்னமணி வள்ளைக் கருக்காதாள் - பன்னியபுட்

௭௫. சாற்றுங் களந்தனக்குச் சங்கநேர் கூடலாள்
போற்றுந்தோள் வேணு புரத்தினாள் - கோற்றொடிக்கை

௭௬. மேவுகம லாலயத்தாள் விம்பமுலைச் செங்கோட்டாள்
கோவுதர மாமாலக் கோயிலாள் - ளாவலா

௭௭. ஆற்றுலகெ லாமுழுகு முந்தி வலஞ்சுழியாள்
சிற்றிடைநூ லாங்குறுக்கை சிந்தியாள் - வெற்றிசெறி

௭௮. யன்ன பணியல்குன் பாணிக்க நாகத்தா
ளன்ன தொடையி னரம்பையாள் - கன்னியர்கைக்

௭௯. கஞ்ச மிசையிற் கணைக்கான் பகரத்தாள்
பஞ்சடியி னற்கச்ச பாலயத்தாள் - செஞ்சொலாள்

௮௦. பூணு மழகும் புறப்பொருளுந் தன்னிழலிற்
காண வழகெறிக்குங் காந்தியாள் - வீணைமொழிப்

௮௧. பாங்கியரோ நாளும் பணிந்துறங்கும் பாயலிலே
யிங்கொருவ னென்கனவி லெய்தினு - ராங்கவனை

௮௨. யாரென்றே னென்றெரிய லாரொன்று மொத்தரோ
நீரென்றேன் சென்னியிலே நீரென்றார் - பாருமிவர்

௩௮௩. பந்தென்றே னின்குதிபூம் பந்தென்றார் வெண்ணீறே
சந்தென்றேன் போய்வந்தேன் சந்தென்றா - ரெந்தவூர்

௩௮௪. நாடென்றே னல்லுறவே நாடென்றார் கையிலே
போடென்றேன் கோபாலா போடென்றார் - போடுமிது

௩௮௫. கோதென்றே னீயதரங் கோதென்றா ரிங்குண்டோ
வாதென்றே னாடினேன் வாதென்றா - ரோதுசடைப்

௩௮௬. புல்லென்றேன் வந்திழுகப் புல்லென்றார் நெஞ்சிவர்க்குக்
கல்லென்றே னேசமினிக் கல்லென்றார் - நல்லதிவர்

௩௮௭. வம்பென்றே னின்முலைக்கே வம்பென்றா ரெண்ணியதே
னம்பென்றே னம்மையே நம்பென்றார் - கொம்புமிவர்

௩௮௮. வாக்கென்றே னுடனேய வாக்கென்றா ராருடனே [வான்
தாக்கென்றேன் கொங்கையொடு தாக்கென்றார் - போக்க

௩௮௯. போமென்றே னல்வேதம் போமென்றார் பித்தரிவ
ரோமென்றே னேதுமறியோ மென்றார் - தாமரைக்கைத்

௩௯௦. தீயேதென் றேன்காமத் தீயென்றார் கண்விழித்தேன்
போயே மறைந்தார் புறம்போகா - ராயவரைச்

௩௯௧. சொல்லி யருளுமெனத் தோகையே கோகிலமே
மெல்லியலே கொம்பே விளைத்தேனே - வல்லியே

௩௯௨. பொன்னே யிளமானே பூவையே பொற்கிளியே
மின்னே யநங்கன் விசயமே - யன்னமே

௩௯௩. கேளுநன் கனவு கிடையாக் கனவுகா
ணுளுந் துணையிறைவ னுனன்காண் - காளனுடன்

௩௯௪. செங்கையத்தி பூசித்த தெய்வத் திருவுடம்புன்
கொங்கையத்தி பூசைதனைக் கொள்ளுங்காண் - சங்கரனை

௩௯௫. நற்கனிவாய்ப் பூசித்தா னன்கனிவாய் நீபோலுன்
பொற்கனிவாய் நீரும் புலப்படுங்காண் - கற்கனிந்து

௩௯௬. நல்குநா கத்தை நயந்தபிரான் பேரருளா
லல்குனா கத்தை யறியுங்காண் - செல்கோயிற்

௩௯௭. சேமநூ லிற்செய் சிலந்தியையாட் கொண்டவனுன்
காமநூ லிற்குங் கனிவான்காண் - டாமதியா

௩௯௮. னென்று பொருள்விரிக்கு மெல்லைக்க ணெவ்வுலகுஞ்
சென்று பணியரனார் சிற்பரனார் - குன்றதனிற்

௩௯௯. சப்பாதி போற்றினார் சங்கார நீற்றினார்
பம்பா நதியார் பரகதியார் - செம்பொற்

௪௦௦. சிலைவடத்தார் கஞ்சன் சிரமடர்த்தார் விண்ணோர்
தலைவடத்தா ரந்தகனைச் சாய்த்தார் - குலைவடர்த்தா

ச0க. ரன்பர்க்குத் தோற்றுவா ரையர்கா ளத்தியா
ரின்பத் திருத்தேர்மே லெய்துதலு - முன்பிரவிற்

ச0உ. கண்ணுறக் கண்ட கனவை வரக்கண்டாள்
பெண்ணு மவர்க்கிதுவே பேறென்று - ளெண்ணியவர்

ச0ந. தம்மைப்போற் செங்கைத் தளிர்முடிமேற் சூட்டினு
ளம்மைக்கண் மஞ்சனநீ ராட்டினுள் - வெம்மைமனம்

ச0ச. பித்தேறி னுள்பெண் பிணைத்தேறி னுளம்பூங்
கொத்தேறி யங்கங் குழைந்திட்டாள் - புத்தரசை

ச0ரு. மீளத்தி யாணியீர் வேதத் தியானத்தீர்
காளத்தி யாரே கடிதென்று - டோளிற்

ச0சு, கொதிகொ ளரவக் கொடும்பசிக்கு மாதர்
மதியை யிரையிடவோ வந்தீர் - புதிய

ச0எ. வுடப்போ டுயிரோ டுலாவுநரைப் பூண்ட
வடம்போல வாக்கவோ வந்தீர் - படிந்து

ச0அ. பரவு மிருவர்விழி பற்றுமலெங்கள்
வரிவிழியுங் கைக்கொளவோ வந்தீர் - கருதி

ச0கூ. யெலிக்கு முடியிடுநீ ரின்றே யிவளைப்
புலிக்கு முடியிடவோ போந்தீர் - பலிக்கு

சக0. மொருமாலை வேண்டி யொருமாலைக் கஞ்சும்
பெருமாலை நீக்கீர் பிரானே - யுருகி

சகக. வருவார்க்குப் பேசி வரந்தருவீ ரன்றே
திருவாய் மலரீர் சிவனே - துருவி

சகஉ. யெரிகால் விடம்போ லிருள்வந்தா லென்ன
பரிகாரஞ் சொல்லீர் பரனே - யரிவளர்த்த

சகந. வெற்றிக் கணைக்காமன் வெஞ்சாபப் போர்க்குநீர்
நெற்றிக் கணைக்காட்டி நில்லென்னீர் - முற்றும்

சகச. பொருளாள ராயிருந்தும் பூண்டவளை கொண்டே
ரருளாள ரேசலமென் னுளீர் - மருளானேன்

சகரு. பிள்ளைப் பழிபோதும் பெண்பழிவேண் டாமென்னுங்
கிள்ளைக் குரலிரக்கங் கேளாதே - தள்ளி

சகசு. நடந்தா ரிவளிங்கே நன்மரம்போ லின்றுண்
மடந்தா யெனவழைத்து மானுர் - கடந்ததற்பின்

அரிவை.

சகஎ. ஆரமுத வண்ணத் தலங்காரத் தூரியத்தைச்
சீருடனே தோய்த்துத் திசைமுகத்தோன் - பாரிற்

௪௧௮. சதிராக வோவியத்தைச் சஞ்சரிக்கக் கீறு<br>மதிரூப லேகை யரிவை - புதியவுறுப்

௪௧௯. பத்தனையுந் தத்தமிலே யாபரணம் போலுடலுக்<br>கொத்தழகு பொங்க வொழுகுவாள் - மெத்து

௪௨0. மதுர விளங்கென்றன் மன்றலிளங் காவி<br>னிதழி விளமெல் லியலாள் - முதியபகி

௪௨௧. ரண்ட மலைய வகிலாண்ட முங்குலையக்<br>கண்ட வரிபிரமர் கண்மூடப் - பண்டைநா

௪௨௨. ளோரம் பனைப்பெற்று றோகிப் பலிக்காடும்<br>பேரந்த காரப் பெருங்குழலாள் - சூரஞ்சத்

௪௨௩. தாண்டும் விடைப்புனிதன் சங்கார தாண்டவத்திற்<br>பூண்ட பிநாகப் புருவத்தாள் - பாண்டரங்கன்

௪௨௪. பூசலிலே முன்பு புவனமெலாஞ் சுட்டெரிக்கும்<br>பாசு பதமனைய பார்வையா - ளீசன்

௪௨௫. மிகைத்தபுரந் தூளாக வில்வளைத்துச் சற்றே<br>நகைத்தநகை யன்ன நகையாள் - பகைத்தெண்

௪௨௬. பகட்டைத் திசையொதுக்கிப் பண்டையய னண்ட<br>முகட்டையிடித் தன்ன முலையாள் - வகுத்தகலை

௪௨௭. யோதுசம யங்க ளுணராமற் குத்திபடும்<br>வாதுபொரு ளொத்த மருங்கினாள் - பூதலத்தி

௪௨௮. லாதாரச் சேடனுமஞ் சல்குலாள் கூர்மத்தைப்<br>பாதாளத் தேதுரத்தும் பாதத்தாள் - மேதினிமேற்

௪௨௯. கல்லா லடியோற் கடவுளரு நான்முகனு<br>மெல்லாரு மேத்து மெழிலினாள் - பொல்லாக்

௪௩0. கறைபற்றி யீரொண் கலையோன் குறைய<br>வறுபத்து நாலுகலை யார்ந்தா - ளிறைவுற்

௪௩௧. றநங்கனதி காரியிருந் தங்கரங்க போகந்<br>தினங்கருதிச் செய்யச் சிறந்தா - ளினஞ்சூழ

௪௩௨. முன்னாட் செழுநிலா முற்றத் தரியணைமேற்<br>பொன்னாட்டி லிந்த்ராணி போலேறித் - தன்னைக்

௪௩௩. குறுகி யொருவிறலி கொண்டாடச் சாந்து<br>நறுவிரையும் பூமலரு நல்கி - விறலியே

௪௩௪. நாரியரை யாட்கொண்ட நாயகர்க்குள் ளேசிறந்த<br>பேரழகு நாயகரார் பேசென்ன - நேரிழையே

௪௩௫. தாயி லறம்புரிந்த தங்கைக்கு மாறாய<br>சேயிழையா ளுண்மைதனைச் செப்புதுபோ - தூய

௪௩௬. முகமிழந்து தன்மனைவி மூக்கிழந்து மின்ன
மகமகிழ்வா னைச்சொல்ல லாமோ - மகமதிலே

௪௩௭. தேய்ந்தானைப் பல்லொடியச் சென்றானைப் பூங்குயிலாய்ப்
பாய்ந்தானைப் பேசிற் பழுதன்றோ - காய்ந்தளவி

௪௩௮. னீறாயி னானை நிறத்தினுதை பட்டானைக்
கூறான கையானைக் கூறுதுபோ - தேறி

௪௩௯. லருத்தியுள்ள பெண்ணுக்கு மாணுக்கு நாதன்
பொருத்த சிவனேகாண் பெண்ணே - கருத்துனக்கென்

௪௪0. சொல்லென்ற போதே சுடுதென்ற லேதென்று
னல்லென்ற பாவிக் ககப்பட்டாள் - கல்லால்

௪௪௧. விரவிதேர் வந்தானு மெல்லியலீர் நம்மூர்க்
கிரவிதேர் வாராதிங் கென்றாள் - கரதலத்தி

௪௪௨. லன்று திருவிளையாட் டானநாட் கண்புதைத்த
தின்று முளதோ விறைக்கென்றாள் - கொன்றைக்

௪௪௩. கிணைவிழியின் முத்துகுத்தா ளெய்யாதே யென்று
கணைமதனைத் தாழுங் கதைபோ - லணைமேல்

௪௪௪. விழுந்தா ளெழுந்தஞ்சி வேதாவின் கற்பங்
கழிந்தாளிற் கங்குல் கழிந்தா - ளெழுந்தாள்பி

௪௪௫. னேனைக் கருங்குழலீ ரின்றைக்கெவ் வாறுபெரு
மானைப் பிடிக்க வகையென்றாள் - கானக்

௪௪௬. குழலிலே கண்ணிவைத்தாள் கொங்கையில்வா ரிட்டாள்
விழியைவலை யாய்த்திரைய விட்டாள் - பொழுதுணர்ந்து

௪௪௭. நின்றாள் வழிநோக்கி நிற்பா ணிலையறியச்
சென்றாடு தீர்த்தன் சிராப்பளியான் - கன்றாப்பூ

௪௪௮. ரொள்ளிய தாணு வொருபாலன் பாலாழிப்
பள்ள னயனெழுந்த பாகத்தான் - றள்ளித்தன்

௪௪௯. குன்ற மிடந்தவனைக் கொல்லாமற் பாரிடந்த
பன்றி சபதம் பரிகரித்தா - னன்றறியாப்

௪௫0. பாணனிடத் தொன்றியருட் பாணனைக்காத் தான்வடநூற்
பாணனியாழ்ப் பாணன்பண் பாடினான் - சேணகரா

௪௫௧. னப்பாலைக் கப்பாலா னப்பாலற் கேவலைவா
னிப்பால னண்டதிறந் தெண்ணகையான் - மூப்பாலா

௪௫௨. முத்தியான் முத்தியான் முத்தா வணமகிழ்வான்
மத்தியா னக்கதிரின் வைகுவான் - பத்தி

௪௫௩. யரிச்சந் திரனை யருச்சுனனைத் தன்கண்
கரிச்ச பகீரதனைக் காத்தான் - றரிச்ச

௪௫௪. மரிச்சவரை யென்று மரிப்பியா னண்ட
மரிச்சரிச்ச தூளே யணிவான் - விரிச்சிருவர்

௪௫௫. பாடுஞ் செவியான் பரத்தையடை யார்செவியா
னூடுஞ் செவியா னருட்செவியான் - காடணுகிப்

௪௫௬. பன்னியர்கள் கூறை பறித்தான் பசுங்கனக
மின்னியநற் றேரேறி மேவினான் - முன்னிவளுந்

௪௫௭. தானை கொடுநடந்து தாக்கினாள் காளத்தி
யானை வலையி லகப்படுமோ - வானமுய்ய

௪௫௮. வெம்புரகேசரியை வெள்ளுகிரி னுள்ளுஞ்
சிம்பு ளொருவருக்குச் சிக்குமோ - வம்புதெரி

௪௫௯. வெஞ்சாப வேடன் விழிபறித்தே யுட்புகுத்த
பஞ்சா னனந்தான் பயப்படுமோ - கஞ்சநறும்

௪௬0. பூவிற் புலிநகத்தன் பொற்கைநகத் தானுறக்கு
மாவிற் புலியொருவர்க் கஞ்சுமோ - நாவிலிவள்

௪௬௧. பன்கலைகற் றுண்டோ பயமுறுத்தப் போய்ப்புகுந்தா
டன்கலையுந் தோற்று டரங்கித்தாள் - புன்கலைகள்

௪௬௨. போலே பெருமானும் புன்முறுவல் செய்துதேர்
மேலேக மற்றை விழாவீதிப் - பாலொருத்தி

## தெரிவை.

௪௬௩. பக்கமலை வேதா வழகர்பு ராசியிலே
தக்க மதிமந் தரநாட்டி - மிக்க

௪௬௪. கரணவடம் பூட்டிக் கலையாற் கடையத்
திருவவதா ரஞ்செய் தெரிவை - சுருதிபணி

௪௬௫. நங்கயிலைக் குன்று நறைக்காந் தளுமனைய
செங்களபக் கொங்கையாள் செங்கையா - லிங்கிதவேள்

௪௬௬. வில்லின் வரிநாரி மென்கதலித் தண்டனைய
வல்லி யுரோமத்தாள் வாமத்தாள் - சில்பொழுதி

௪௬௭. லல்கு மிமையோ ரமுதுஞ் சிவனமுது
நல்குமத ரோட்டத்தா ளூட்டத்தாள் - புல்காமல்

௪௬௮. வண்டகலுஞ் சண்பகமு மாயோன் வலம்புரியுங்
கண்டனைய துண்டத்தாள் கண்டத்தாள் - வெண்டரளச்

௪௬௯. சோதிக் கழையெனவே சூதத் தளிரெனவே
சாதிக்குந் தோளினா டாளினாள் - சீதளித்த

௪௭0. நீண்மண் டிலத்து நிலாவு மிருளுட்போற்
கேழ்மந்த காசத்தாள் கேசத்தாள் - சூழ்மணியின்

சஎக. பைக்கொண்ட மாதலையும் பங்கயமு மென்றுலகோர்
கைக்கொண்ட தந்தத்தாள் கந்தத்தாள் - செய்க்குண்

சஎஉ. மடையோதி மப்பெடைக்கும் வஞ்சிக் கொடிக்கு
மிடையா நடையா ளிடையாள் - படைமதனால்

சஎங. வாசித்தார் கொங்கைகளை வாசித்தார் கூந்தலுக்கு
வாசித்தார் கொய்பூ வனத்திலே - தூசினிடை

சஎச. கண்டு கொடிகள் கடிது பரமேற
வண்டு விழியின் மறைவெய்தத் - தொண்டையிதழ்

சஎரு. தன்னை யுறநோக்கித் தத்தை முகஞ்சிவப்பக்
கன்னி மயில்வெருவிக் கண்பரப்ப - வன்னமுலை

சஎசா. வற்கண்டு கூட்டமிட மஞ்சரிகள் கண்டனைய
சொற்கண்டு நைந்துகனி சோர்ந்துவிழ - நிற்குங்

சஎஎ. கிளைத்தோளைக் கண்டு கிளைவளைய மூரன்
முளைக்கே முலைகண் முகிழ்ப்ப - வளைக்கடகப்

சஎஅ. பாணித் திரள்கண்டு பல்வெங்கள் கைகுலைப்ப
மாணிக்கப் பீடத்தில் வந்தேறி - நீணிலத்தி

சஎகூ. லஞ்ச மவற்றைமெலா மஞ்ச லெனநிறுத்தி
வஞ்ச வசந்தனைநீ வாவென்று - விஞ்சியவென்

சஅ0. றுசை யுரைபோ யருட்கயிலை யார்க்கென்ன
மாசுணமுண் டஞ்சவேன் மற்றென்னப் - பூசலிடுங்

சஅக. கோகிலத்தை யேகென்னக் கோகிலமு மும்பர்கோன்
மாகுயிலாய்ப் பட்ட வகைசொல்ல - மோகத்தை

சஅஉ. யிட்டமத னுபோ யிசையென்ன மற்றவனுந்
துட்ட நயனஞ் சுடுமென்னக் - கிட்டிமால்

சஅங. வண்டு பகரென்ன வண்சிலந்தி நூல்பிணிக்கி
னண்டி விடுவிப்பா ரார்ரென்னத் - தண்டலையிற்

சஅச. பூவைகா ளன்பர்பாற் போமென்ன வேடனுளன்
பாவையறி யாயோ பகரென்னக் - கோவித்து

சஅரு. மாங்குயிலின் மெய்கருக வண்டு பொறியுண்ண
தேங்கணைத்திற் பூவை திளையெய்த - வேங்கித்

சஅசா. துரத்துமிளங் காற்றுழலச் சூறைகொளும் பஞ்ச
சரத்தனரு வாகச் சபித்துத் - திருத்திழையீர்

சஅஎ. பொல்லா மரத்தின் பொழிலைத் துறந்துபோய்க்
கல்லா லடியதனைக் காண்பேமோ - நல்லபணி

சஅஅ. மத்தகத்தின் மீதிலே மாணிக்க மிட்டவர்க்கு
முத்தமிட நாமு முயல்வேமோ - பத்திநூல்

சஅகூ. கீரனை வைக்கொண்டு கேட்டார் தொடைநமது
கீரனா வைக்கொண்டு கேட்பேமோ - தாரணியி

சகூ0. லவ்வே தனைநினைந்தா ளையரோ யாசையெனு
மிவ்வே தனைநினையீ ரென்பேமோ - செவ்வேயாய்

சகூக. மெச்சிமவான் றன்மகளார் வேந்தை மடலெழுதிப்
பச்சிமவா சற்படிந்து பார்ப்பேமோ - நிச்சயித்துக்

சகூஉ. காமருவு நீழற் கனைமுகரி நீர்க்கனக
மாமணலிற் கூடல் வளைப்பேமோ - நாமெலாஞ்

சகூங. சொல்லீ ரனைவருஞ் சோகமே னிப்பொழுதே
வல்லீ பவனி வருவரெனு - மெல்லேக்கண்

சகூச. வட்டக் குடையநந்த மாமன் மகத்திமையோ
ரிட்டத் தினைக்கெடுத்தா ரென்றூட - முட்டத்தன்

சகூரு. சீத விழியென்று சீர்ப்பதத்தை முன்பணியுஞ்
சோதி மலரைச் சுமப்பானும் - போதிலே

சகூசா. தங்கித் தனது தலையென்று பிச்சைகொளுந்
தங்கக் கலத்தைச் சுமப்பானுஞ் - செங்கையிலே

சகூஎ. யாபரணந் தன்னை யருளிற் சுமப்பானுந்
தாபதரும் போற்றத் தடந்தேரிற் - பூபரண

சகூஅ. குண்டலத்தான் சைலங் குடிகொண்டா னோர்மூன்று
மண்டலத்தான் மூவிரண்டு மண்டலத்தான் - கண்ட

சகூகூ. சலந்தரனைக் கொன்றான் சதாசிவனாய் நின்றா
னலந்த வடியாரை யாள்வான் - பலந்தருநற்

ரு00. காளகண்டன் விண்ணோர்கள் கண்டன் சசிகண்ட
னீளகண்டன் கண்ணின்ற நெற்றியான் - கீளுடையான்

ரு0க. பூளை யணிசடையன் போற்றியால் பூசிக்க
வாளையுமி மூழ்மூழி வழங்கினோ - னூருந்

ரு0உ. திடத்தொடுவந் தானிவளுந் தெருக்குத் தெரும்
வடத்துக்கு நேரே வடமுங் - கொடிக்குக்

ரு0ங. கொடியுங் கொடுவந்தாள் கும்பமெதி ரிட்டாள்
வடிவஞ்சுக் கேயுண்ட மாற்று - னிடையிலே

ரு0ச. யெய்தா னிவளொருத்தி யென்செய்வா ளெய்தவனை
வைதாள் சிவன்கண்ணை வாழ்த்தினாள் - கைதா

ரு0ரு. னயர்த்தாள்பொன் பூண்டா ளவர்மேனி தீண்ட
வியர்த்தாள் பெருமூச்சு விட்டா - ளுயிர்த்தா

ரு0சா. டருமமுரைத் தீரென்றாள் சார்ந்தாரைக் காத்தார்
விருதுவிடா தேமயிலை மீட்டார் - தெருவகல

## பேரிளம்பெண்.

௫0எ. மண்ணரசர் விண்ணரசர் மாற்றரசர் போற்றுபெரும்
பெண்ணரசெ லாம்பணியும் பேரிளம்பெ - ணண்ணி

௫0அ. யியலு மிசையுமி ரெண்ணிரண்டுங் கண்டு
மயிலுங் குயிலு மருவாள் - புயலொழுங்கு

௫0௯. நீரத் தெழுதலிலாத் தெண்டிரைபோ லஞ்சனங்க
ளோரத் தெழுதாத வொண்கண்ணாள் - சேரத்

௫௧0. திருத்தி யெவர்க்குஞ் செவிபொதிந்த விண்ணோ
ரருத்தி யசனவச னத்தா - ளொருத்தி

௫௧௧. முலைவளைத்த மார்பர்க்கோ முன்னிற்பே மென்று
தலைவளைத்து நின்றபடி தானோ - சிலைவடத்தா

௫௧௨. ளெம்மலையுந் தாழவா ழிக்கயிலை யைத்தாழுஞ்
செம்மையுட னேவணக்கஞ் செய்தவோ - தம்பி

௫௧௩. யுருக்கமறக் காணிக் குடன்பிறந்த மல்லா
னெருக்கியுடன் சாய்ந்த நிலையோ - செருக்கி

௫௧௪ வரிவண் புளக மலையான போதே
சரிவுந் தருமென்று தானோ - தெரியாத

௫௧௫. பொய்யென்பா ரிவ்விடையைப் பொய்யோமெய் யோவென்
பையவிறங்கி யெட்டிப் பார்த்தவோ - மெய்யா

௫௧௬. மிடையுமிடை யிங்கே யிருக்கொணா தென்று
படியி லிடந்தேடும் பண்போ - நடுவே

௫௧எ. யெழுகளியர் வாழ்வி லிறுமாந்தார்க் கவ்வாழ்
வொழிய முடிவளைத்தற் கொப்போ - விழியினாற்

௫௧அ. சிங்கத்தைப் பார்க்கச் சிறிதிழிந்து பின்னிடைந்த
வெங்கும்ப வாவின் விகாரமோ - பொங்கப்

௫௧௯. பொருப்பை வளைத்தானைப் போர்பொருவோ மென்று
விருப்புலகோ டாகின்ற வீறோ - மருப்பானை

௫௨0. யுற்றிறைஞ்ச மாகண் டடல்வளைத்த வோவென்னச்
சற்றிறைஞ்சி நின்ற தனதடத்தாள் - கற்றைக்

௫௨௧. கரிய குழற்கிரண்டு கன்னியரே சேரு
மிருகழலே சூடுமல ரென்றுஞ் - சரிவுறினு

௫௨௨. மற்புதமாங் கொங்கைக் கடலானை பூசித்த
பொற்புடைய மேனியே பூணென்றுஞ் - சொற்பதத்தி

௫௨௩. னந்தா விளக்கெனவே நக்கீரர் சொன்னதிரு
வந்தாதி யேகா தணியென்றும் - புந்தியுடன்

ருஉச. மெய்க்காளன் பூசித்தார் மேற்சா ளரங்கொழுகை
கைக்கா கியகங் கணமென்றுந் - திக்கெலா

ருஉரு. மின்னுதற்குச் செய்கோயில் வெள்ளிவட்டி னன்னீறே
தன்னுதற்குச் சிந்தூரந் தானென்றும் - பன்னுதற்கு

ருஉசு. வான்சிலப்பி பூசித்தார் வண்சிலம்பைச் சூழுவதே
தேன்சிலம்பு பூந்தாட் சிலம்பென்று - மூன்சுவைத்தார்

ருஉஎ. நற்பணிகள் செய்வதுவே நம்பணிக ளாமென்றும்
பொற்பணிகள் பூணுக பொற்பினாள் - கற்பகத்தி

ருஉஅ. னேடலங்கு மாலை யிளம்பாளைத் தேமாலை
நீடரங்க முத்த நிலாமாலை - யாடரங்கிற்

ருஉகூ. சோதி வயிரச் சுடரின் றவிசேறித்
தாதி யொருத்தி தனைநோக்கி - வேதிகையிற்

ருங0. சந்தமாப் பன்மணிக டன்முன் பரப்பென்ன
வந்த மணிக ளவைபரப்ப - முந்தி

ருஙக. நிறைகூ டலைவளைத்தா ணீலத்தைக் கண்டா
ளிறையோன் களங்கண்டே னென்றாள் - பிறகினிய

ருஙஉ. செம்பவளங் கண்டா டிருமேனி கண்டதுபோ
லும்பர்பிரா னாரமுலைக யுன்னினாள் - கொம்பனையாள்

ருஙங. பச்சைதனைக் கண்டாளோர் பாதிமையென் போல்வார்க்கு
வச்சவடி வோவென்று வாழ்த்தினா - ளிச்சை

ருஙச. வயிரத்தைக் கண்டாள் வயிரத்தா ணங்க
னாயிருக்குச் சார்பென் றுரைத்தா - ளயர்வுடனே

ருஙரு. முத்தைக்கண் டாளிதுவேய் முத்தோவென் றாளயலா
ரொத்தைக்கண் டாயெனவே யேகினா - ரத்தனையுங்

ருஙசு. காணச் செழுந்தென் கயிலாய மாமலையா
னாணிச்செம் பொன்முகரி யாற்றினான் - வாணி

ருஙஎ. யரிபிரமர் போற்றுபுரி யாற்றார்நன் னாட
னுரியதிருக் காளத்தி யூரான் - வரியளிகள்

ருஙஅ. கூடிவிளை யாடுதிருக் கொன்றைச் செழுந்தாரான்
பாடியநால் வேதப் பரியினா - னாடினை

ருஙகூ. யாதரிக்கு மொற்றைமருப் பஞ்சந்தி யான்றிதியான்
மேதினியை யுண்ட விடைக்கொடியான் - மூதண்டஞ்

ருச0. சென்றதிரக் கம்பிக்குந் தெய்வ முரசுடையா
னன்றுதிரு நீல்கண்ட ராணையான் - மன்றற்

ருசக. கரந்தையான் செங்கனகக் கல்லா லடியான்
சுரந்தவன்பர் நெஞ்சத் துணைவன் - வரந்தருவா

௫௪௨. னத்துவிதன் சுத்த னருளாம்பெண் ணோர்பாகன்
வித்துவித மின்றி விளைவிப்பா - னத்தனைக்கு

௫௪௩. மான்பகுதி யாங்கார மாவிந்து நாதாந்தத்
தூன்பகுதி யாயுயிரா யுள்ளூறீஇத் - தேன்பா

௫௪௪. யனந்தவித நாம னனைத்துலகும் பெற்றான்
வனைந்த சராசரத்தில் வாழ்வா - னினைந்தடியார்

௫௪௫. பாடவிரந் திட்டான் பசியாற்றி னான்சந்தா
யோடியுழன் றான்புறம்புக் குள்ளானான் - வாடு

௫௪௬. முதலைவாய்ச் சேயழைத்தான் மூங்கைகவி கொண்டான்
குதிரைநரி யாக்கிக் கொடுத்தான் - மதுரையிலே

௫௪௭. கூனகற்றி னான்வெங் கொதிப்பகற்றி னானங்கி
தானகற்றி னான்கற்பந் தள்ளினா - னீனர்களை

௫௪௮. யேடேற்றி வன்கழுவி லேற்றினான் கற்புணையைக்
கோடேற்றி நீற்றறைக் குளிர்வித்தான் - வீடேற்றி

௫௪௯. யிடேற்று வான்புழுக்க ணிருகத் தன்பதியின்
மாடேற்று வான்கட்டு வாங்கத்தான் - கோடை

௫௫௦. வசந்தா டவிதழைத்த வாறாய்ச் சிவந்த
பசந்தாடி யின்னலாயின் பந்தி - யசைந்தாடப்

௫௫௧. பூவுலகெல் லாம்புகழப் பொற்பூவி னன்மாரி
தூவத் திருத்தேர்மேற் றோன்றுதலு - மாவலாற்

௫௫௨. கூட லொழிந்தோடிக் கூப்பிட்டாள் போகாதே
நீடு மணித்தேரி னில்லென்று - டேடரிய

௫௫௩. வள்ளலே தெய்வ மலைக்கொழுந்தே மாமணியே
தெள்ளமுதே தேனே செழும்பாகே - யுள்ளத்

௫௫௪. தொளிவிளக்கே நான்மறைக ளோலமிடுங் குன்றே
தெளிபொருளே தொல்லைச் சிவனே - வெளிவெளியே

௫௫௫. காலக் கடைத்தனியே கண்ணேயென் காட்சியே
மாலைத் திருக்கூத்தே வாரணமே - ஞாலமே

௫௫௬. பல்லுயிர்க்குந் தாயே பசுபதியே பல்லுயிர்கள்
செல்லிடமே யெல்லோர்க்குஞ் செல்வமே - நல்லுறவே

௫௫௭. பாலே பழமேநூல் பாடும் பரங்கருணை
யாலே விளைவிளைவே யாதியே - மூலமே

௫௫௮. யாரா வமுதே யடியேன் மனமுனது
பாரா முகந்தனக்குப் பற்றுமோ - தீரமற்

௫௫௯. சார்ந்தாரைக் காத்தார்மெய்த் தன்மமோ வன்மந்தா
னோர்ந்தாரைத் தள்ளிவிட னீதியோ - சோர்ந்து

௫௬௦. பழைத்தவிழி நீரிலே வாடினேன் பாரீ
ரழைத்தெனைவாழ் விக்கு மரசே - யுழைத்தடக்கை

௫௬௧. யையரோ யும்மைப்போ லாக மெலும்பானேன்
வெய்ய வடிசில் விடமானே - னையம்புக்

௫௬௨. கோடி யுழன்றே னுமையே நினைவானேன்
கூடி யணையாக் குணங்கண்டீர் - வீடு

௫௬௩. ரலைப்பொன் முகரியிலே யாடுவீ ரிந்த
முலைப்பொன் முகரியிலே மூழ்கீர் - கலைத்தெளிவை

௫௬௪. வெண்பாவைக் கீந்தொருவன் வெண்பாவைக் கைக்கொண்
கண்பாவை துஞ்சாக் கனிந்தருளீர் - பெண்பாவி [டீர்

௫௬௫. யிவ்வேட னன்னரி யிணைவிழிமேல் வைத்தானு
மவ்வேடன் போலுநேக் காகாதோ - மைவேட

௫௬௬. ஞானப்பூங் கோதைக்கு நாயகரே யிப்பவனி
மானப்பூங் கோதையனை வாட்டாதோ - தேனக்கு

௫௬௭. வண்டார் குழலார் மணவாள ரேயுயிரை
வெண்டார் குழலாக்க வேண்டுமோ - தொண்டாமென்

௫௬௮. தாமபய மென்னைச் சலதியிலே காத்தநீர்
காம பயமெனக்குக் கற்பித்தீர் - மாமைபயி

௫௬௯. லிச்சைத்தீ வெம்மை யிருக்கவே யென்னுளிந்தக்
கொச்சைத்தீ யைக்கையிற் கொண்டீரோ - பச்சைநிற

௫௭௦. மேலிக் குறவான நிட்டூர மோகொன்றை
பாலிக்கி லீரிதென்ன பாவமோ - சாலவறம்

௫௭௧. பூண்டதிரு மேற்பூச்சைப் பூசநினைந் தேனேதான்
வேண்டுமணி மேனி வெதும்பவோ வாண்டகையே

௫௭௨. யாண்டருளீ ரென்பாளை யாண்டருளா தப்படியே
சேண்டரணி மாதர் திசைமாதர் - நீண்ட

௫௭௩. திரைமடவார் பூமடவார் தெய்வ மடவார்
வரைமடவார் நாக மடவார் - தரைமடவா

௫௭௪. ரெல்லாரு மால்கொண் டிறைவா வெனவிறைஞ்சச்
செல்லா டகக்கிரணத் தேரேறிக் - கல்லொலி

௫௭௫. னத்தன் சதுமுகன்மா லாயிரங்கண் ணன்மணிமான்
சித்திர சேனன் சிவகோச - னத்திசிலை

௫௭௬. வேடன் சிலந்தியிரு மெல்லியலார் நக்கிரன்
சேட னடைந்த சிவபிரா - னாடல்

௫௭௭. விருதுகட்டுஞ் சோதி விடங்கன்மால் வெள்ளை
யெருதுகட்டுங் காளத்தி யீசன் - சுருதித்

௩௭௮. திலகனபி ராமன் செறிவீதி தோறு
முலகறியப் போந்தா னுலா.

திருக்காளத்தி நாதருலா

முற்றிற்று.

---



# திருக்காளத்தி நாதருலாப் பாடபேதம்.

காப்பு: சந்தியார். ஆனார்.

க. சிறப்பின்.

உ. முற்பொருள். குலக்குன்றாய். சீலமாய்ச்.

ங. ஐந்தியற்றி. கடந்து தான் புரியு மவ்வேலை. ஆக்குவிக்கும்.

ரு. அடகயில்வார் போற்றும்.

அ. கொற்றமணிக் காஞ்சியிலே.

கூ. தென்றற் கயிலை.

கஉ. தெற்குவருஞ்.

கங. அகத்திய மாங் குன்றி லழைத்த. பாங்காய் - மிகுத்த.

கசா. மும்மைப், பதினா யிரர்.

கஅ. கண்டுதொழ. மற்றவரை.

ககூ. கொல்லென்ன. பிரமத்தி. பிர்ம்மகத்தி.

உக. தோன்றி மலரயனை. பின்னும் - பரமகத்து.

உஉ. அவன் போற்ற முகரிபுவா, நன்மகவை யீயவந்த நாளிலே.

உங. நல்கினேன் - பாடவிகல்.

உரு. தாக்கிய சாபம். வாக்குவியாகும்படிக்கு வாய்தந்தோன்.

உசா. சந்திரன்மா சத்தி.

உஎ. அக்கினிப் பகவன். சந்த.

உகூ. பெரிய சித்திரசேனன்.

ஙO. பேரூராம்.

ஙஉ. கபாலமூர்த்தி.

ஙரு. தீர்த்தத் தமர்ந்தருள்வான். உடைய பொற்.

ஙசா. மாயூரத் திருச்சுனை.

ஙஎ. பாங்கான் - திருத்துமுதல்.

ஙஅ. * கங்கைத்தலத்தான்.

சO. சிவன்பட.

சங. தான் கொள்ள.

சச. பட்டதற்பின்.

சரு. பொருதும். பொருந்தப். உடுக்கச் - செய்நாளில். முன்னாளில்.

சசா. தன்னைப்பே ரிட்டோருங்.

சஎ. காரீட்டி. நீரீனாட்டி.

சகூ. சீர ணவனன்பை. பாரென்றிருக்க.

ருO. நின்றளவில்.

ருக. அப்பிவிட. மற்றைக்கண்.

ருஉ. எண்ணிக்.

ருங. சயிலமடை.

ருச. கீரற் கருளாற் சரீரத்தை.

ருரு. பாண்டியனார் நாட்டிலுந்தன் பாரத்திருவடியை, ஈண்டித் திருவடியி லேறவே.

ருசா. மானாரையிவ்வாறு.

ருஎ. முன்னமறைத்.

ருஅ. காபாலியென்னுங்.

ருகூ. குழலா ருடன்புகழ்ந்து.

சாO. மறைத் தோதுகின்ற பாகவதத் தம்மானை.

சாக. பூசச் சுடுந்திரு. பூசியிடும்.

சாஉ. ஆற்று வளநாடன்.

சாரு. புரத்தா - னனிதஞ்சை. நனிநஞ்சை. தனதஞ்சை. கனதஞ்சை.

சாகூ. கயிலைச் சங்கரனும். நடந்தேமென் - றுலகில்.

எO. இரும்பையெலாங் கூட்டி.

எக. கோயி லலையேறு மாபுரங்கள்.

எஉ. பாகத்தில்.

எங. சச்சன்.

எஅ. * சொல்வார்க் கிலவன். கலைக்காட்டன்.

எகூ - அO. நடை யிரவன். ஒருத்தனன்பு. நாதன் - படியைக், கவரொண் படையெடுத்துக் காககுந்திதியான், மவுனன் கயிலைவடி வாளன் - சுவையூ, ரைருத்தியிடுங் கண்ணப்ப னன்பறிய வேண்டித், திருத்தியன். கருத்தடைத்து.

அக. யோககரணன். புரிவோரை.

அஉ. மானுகத்தன். மோதுநீர்.

அங. சைவத்தா னுய்கை.

---

* இவ்வடையாள மிட்டவைகள் சிறந்த பாடங்களெனக்கொள்க.

௯௧. பேரணையான் றந்த. கீரனா றும். கீரைநாறும்.

௯௩. மேவி வளர்ந்த; விழைந்த.

௯௮. நாகத்தா னம்பிரா னம்பிரா ன். சேகிற்.

௯௯. பழகியெறி.

௧௦௦. தலையின். தருகன்னச் சந் தனஞ்.

௧௦௨. பணியும் பணியும்.

௧௦௬. காட்டுதுர. நீடுதுர.

௧௦௮. கயிலாயவலை.

௧௧௨. * என்றாவிற் பாலானான்.

௧௧௩. தும்பையன் சண்பகன் சுந் தரன் சங்கினன்; சுந்தரன் தந்தி ரன்.

௧௧௫. தெற்கின் கயிலை.

௧௧௭ - ௧௧௮. இரணியமெய்த், திண்.

௧௨௦. நள்ளிருளின்.

௧௨௧. கரந்த.

௧௨௩. * அபிராமி மூளரிக்கு.

௧௨௬. * அங்குரித்து. அங்குதித் து.

௧௩௨. கலவைத் தளிர்சாத்தி.

௧௩௭. பாராது.

௧௩௮. அவ்விருளில்.

௧௩௯. மங்கையுடன் சேக்கை வ ளர்ந்தருளி.

௧௪௦. செருப்பணிந்த.

௧௪௭. தோடும் புறத்தார்த்து.

௧௪௮. சகோதரனென்று. மகோ தரநீ லத்தை.

௧௪௯. மா ணிக்கவடஞ் சேர்ந்தி லங்க.

௧௫௨. ஒன்பதின்ம ருற்ற.

௧௫௩. தாருகனைக் காய்ந்தானுநஞ்.

௧௫௬. ஓர் செங்கை.

௧௫௭. நச்சுக் கிரநவ்வி.

௧௫௯. தொண்டர் குழாங்.

௧௬௦. நாக, சரமதிரச் சங்கந் தழ ங்க. செம்பொ, னரசதிரச் சங்க மதிர.

௧௬௨. போல்வெண் குடைநிழற்ற.

௧௬௩. பார்த்துழல.

௧௬௫. காளாஞ்சி.

௧௬௮. மணிகும்பம்.

௧௬௯. யாழ் - செங்கோடு.

௧௭௧. * அண்சந் திரனைவென் றுண்டவர்க்கு. அஞ்சந் திரற்குவே றுண்டவர்க்கு.

௧௭௨. வள்ளலனு மத்துவச.

௧௭௩. கிரியுமரியும். கரியுமறியுங் க டாவு.

௧௭௫. ஊனுருகிச்.

௧௭௬. தோழனும் பொற், பெற்ற.

௧௭௭. * எனு மாதாரபூதர்.

௧௮௩. கருரர்.

௧௮௪. தர்க்க.

௧௮௫. கண்டோரும். கொண்டோ[ரும்.

௧௮௬. நின்றோரும். * சிவன்செல் கன்வழியே சென்றோரும்-பாவனைக் குள்.

௧௮௭. விளக்கேத்தும் வித்தகரும்.

௧௮௮. பண்களித்துப்.

௧௯௦. * பூழியருங் கேரளரும்.

௧௯௨. சிட்ட ருயரநின்று சேவிப்ப.

௧௯௪. ஆறு கோத்திரரும். பண் டைநூற்.

௧௯௫. * சுத்தசிவாகமத்துத். வே தபாறகரரும்.

௧௯௮. வைத்தகோயிற். உத்தரிக்கு ங் கூல முடையாரும்.

௧௯௯. தேவ ரடியா, ரறு.

௨௦௦. பொலிந்தேற. பொலிந்தோ ங்க.

௨௦௨. பத்துப்பிறப்புப். செத்து ப்பிறவாச்சிவன். நித்திரையிற்.

௨௦௪. நம்பிக்கு முன்னின்ற.

௨௦௭. கொழுந்தன்

௨௦௮. நாக குலத்திலுள்ள நாக.

௨௧௪. * அலைவா ழலையளகத் தா ரும்.

௨௨௫. தேவிமார்.

௨௨௭. முந்தித்தான்.

௨௨௮. தேங்கொடிரு மாலிகையை ச் சேவியீர். திருவாசிகையைத் தெண் டனிடீர்.

௨௩௨. * மேலேயிருந்த.

௨௩௭. பூவையணிந்தீர். காயைய ணைவீர்.

௨௪௫. வாயிற் பிறவாத.

௨௪௬. குளிர்தாளம்.

